


திருவள்ளுவர் ஆண்டு 1979 ஆவணி 27
சென்னை, 11—9—48

வீச்சு 4




★

டில்லியிலே வேவலும் மவுண்ட் பேட்டனும் வெளியேறியதும் ஒரு பார்ப்பனர் கவர்னர் ஜெனரலாக கோல் சுழற்றுகிறார்! சென்னையிலே சர். ஆர்தர் ஹோப்பும், பிறகு ஆர்ச்சிபால்ட் நையும் வெளியேறியதும் ஒரு மார்வாடி கவர்னராக வலம் வருகிறார். வெள்ளையன் போகிறான் ஆட்சிப் பீடத்தைவிட்டு! ஆனால் பனியாவும் பார்ப்பனரும் பீடமேறுகின்றனர். பார்ப்பனர்—பனியா கூட்டுச் சதி ஜாம் ஜாமென நடக்கிறது நாட்டிலே! யார் இருக்கிறார்கள் இந்த அக்ரமத்தைக் கேட்க! யாருக்கு இருக்கிறது இந்தக் கொடுமையை ஒழித்துக் கட்டும் துணிவு —திராவிடர் கழகத்தைத் தவிர!

★

1½ அணா.

வெளி நாடு 2 அணா.




(8-ம் பக்கத் தொடர்ச்சி)

எவ்வளவு பலாத்கார உணர்ச்சியை நாட்டு மக்கள் உள்ளத்திலே மூட்டிவிட்டார்கள்! முஸ்லிம்கள்மீது எவ்வளவு அபாண்டமான பழிகளைக் கட்டிவிட்டார்கள். என் கொலையின் மூல காரணம் அந்த விஷவாயுப் பிரசாரம். ஆம்! கொலையின் துவக்கம் அந்த நச்சுச் சொற்கள். அதன் விளைவு விநாயக் கோட்சே! நான் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையே பாலம் அமைத்துவந்தேன், பிளவு மனப்பான்மையினருக்கு இது பிடிக்கவில்லை, குத்துக்குக் குத்து வெட்டுக்கு வெட்டு என்று அவர்கள் பேசினார்கள், இந்து-முஸ்லிம் இரு சாராருக்கு மிடையே ஆழமான அகழ் வெட்டிவந்தார்கள், என் 'பாலம்' வளர வளர அவர்களின் அகழியின் ஆழமும் அகலமும் மேலும் மேலும் வளரலாயிற்று, அந்த அகழியிலே மூளைத்த ஒரு பாசி—கோட்சே! அழுக்கு அகழி இருந்தது, எனவே கோட்சே எழும்ப முடிந்தது, கோட்சேயை நொந்து என்ன பலன்......இந்துமுஸ்லிம் ஒற்றுமைத் தத்துவத்தை மட்டுமா என் தத்துவங்கள் எல்லாவற்றையுமே கைவிட்டுவிட்டனர் என் சிஷ்யர்கள் என்று இதுவரை கூறிவந்தவர்கள்...இதுவரை என்ன, இன்றுங்கூடத்தான் மகாத்மா மகாத்மா என்று புல்லாங்குழல் வாசிக்கிறார்கள் தங்கள் புரட்டுகளை மறைக்க......செ! என்ன நன்றி கெட்டவர்கள்!

[கண்களில் நீர் முத்து முத்தாக அரும்புகிறது]

**வ. உ. சி:** அடிகளே, இதென்ன கோலம், வெற்றி வீரராகிய தாங்கள் கண் கலங்கி நிற்பதா, கூடாது. ஊராளும் உரிமை பெற்றதால், அந்த உரிமையைத் தமக்கு வாங்கித் தந்த உத்தமரின் உயரிய இலட்சியங்களையே மறந்துவிட்ட அந்த "மாஜி சத்யாக்கிரகி"கள் மூலையில் கிடந்து முகாரி வாசிக்கவேண்டும், தாங்கள் வருந்தக் கூடாது.

**காந்தியார்:** சிதம்பரம் நீ வாழ்க! என்ன இருந்தாலும் தமிழன் தமிழன்தான்! எதிர்க்கும்போது நேர்முகமாக தைரியமாக அஞ்சாமல் எதிர்க்கிறான். போற்றும் போதும் களங்கம் இல்லாமல் கபடு இல்லாமல் மனமாரப் போற்றுகிறான். இந்த வடநாட்டுக்காரர்கள்......அவர்களுக்கென்ன தெரிகிறது கல்கத்தாவும் நவாகலியும் தவிர......

**வ. உ. சி:** கொஞ்சம் அமைதியாய் இருங்கள். வாருங்கள் இன்னிசை கேட்கலாம் கவிஞர் பாரதியார் இருக்கிறார். அல்லது தங்களுக்கு விருப்பமான வைஷ்ணவ ஜனதோ பாடச் சொல்லட்டுங்களா, இதோ அன்னை கஸ்தூரிபாய் இருக்கிறார்கள்......என்னங்க...

* * *

"என்னங்க சும்மா சும்மா தூங்கிறிங்க, தூங்கிறதோட இல்லாம ஏதேதோ சொல்றீங்க, எழுந்திருங்க பொழுது விடிஞ்சி என்னேரமாச்சி......"

புதுக்குரல்! இந்நேரம் கேளாத குரல்! கணீர் என்று விழுந்தது என் செவியில். திடுக்கிட்டு எழுந்தேன், வ. உ. சியையும் காணவில்லை. அண்ணல் காந்தியாரையும் காணவில்லை, என் அன்பு மனையாள் என் எதிரே நிற்கக் கண்டேன். கேட்ட உரையாடலும் கண்டகாட்சியும் வெறுங் கனவென்று தெரிந்தேன்.

கனவென்று தெரிந்ததும் கண்களைக் கசக்கிக்கொண்டு வாரிச் சுருட்டிக்கொண்டு படுக்கையில் எழுந்து உட்கார்ந்தேன், உட்கார்ந்து கொண்டு சிந்திக்கலானேன், இந்தக் கனவு எப்படி என் உள்ளத்தைச் சென்று தாக்கலாயிற்று—எதனால் நான் இக்கனவு காண நேர்ந்தது என்று!

மனப்பண்பு விளக்க நூலார்கள் கூறுவதுண்டு, நாம் காணும் கனவுகளிற் பெரும்பாலானவை, முன் நாள், அல்லது சில பல நாட்களுக்கு முன்பு, நாம் நம் நித்திய வாழ்க்கையில் காணும் சம்பவங்களின் எதிரொலி என்று! அது உண்மையானால் எந்த நிகழ்ச்சி இந்தக் கனவினை நம் உள்ளத்தில் தூவிற்று என்று நீண்ட நேரம் எண்ணிப்பார்த்தேன், கடைசியில்தான் எனக்குப் புலனாயிற்று; முன் நாள் இரவு, தூங்கப் போகுமுன்பு, நான், தமிழ் "தினசரி"யையும் ஆங்கில "ஸ்வதந்த்ரா"வையும் படித்துக் கொண்டிருந்ததும், அவற்றிலே காணப்பட்ட இரண்டு ரசமான குறிப்புகளும்தான் இந்தக் கனவுக்குக் காரணமென்பது!

அவை இவை:

## 1. 'சுதந்த்ரா' தலையங்கம்:

### [தமிழ் மொழிபெயர்ப்பு]

"மகாத்மா காந்தியின் வாழ்க்கை உபதேசங்களுக்கும் சாதனைகளுக்குமுரிய அடிப்படை உண்மைகளாக அமைந்து கிடந்த தத்துவங்கள் அத்தனையையும், காங்கிரஸ், ஊராளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவுடனே அடியோடு உதறித் தள்ளிவிட்டது என்பது உண்மை.

"விடுதலைப் போராட்டத்தில் வெற்றி கிட்டியதும் காங்கிரசுக்கு முன்னால் இரண்டு வழிகள் தென்பட்டன. ஒரு வழி, ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்திற்குத் தேவையான போர் முறைகளை மகாத்மா எந்த சத்தியாக்ரகம் எனும் சக்தியிடமிருந்து பெற்றாரோ அதே சத்தியாக்கிரகத்தின் ஆற்றலை விடுதலை பெற்ற இந்தியாவில் நிலை நாட்டிக் காண்பிப்பது. மற்றொரு வழி காந்தியத்திற்கு ஒரு "சலாம்" போட்டு விட்டு, அதனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு அதை விட்டு விலகி, உலகம் எங்கணும் சர்வ சாதாரணமாகக் கையாளப்படுகின்ற அரசியல் ராஜதந்திர சூழ்ச்சிகளில் இறங்கி விடுவது. காங்கிரஸ், இந்த இரண்டாவது வழியைத்தான் **வேண்டுமென்றே** தெரிந்தெடுத்து பின்பற்றத் தொடங்கிற்று. **காந்திய இயக்கத்தின் அரசியல் வெற்றிக்கான விழா கொண்டாடப்பட்ட அதே நேரத்தில் மகாத்மாவின் பிரதம சிஷ்யர்களே அவரை அடியோடு கைவிட்டு விட்டார்கள்!** இந்த நிகழ்ச்சிகள் தான் மகாத்மாவின் உள்ளத்தில் 'சாகும் வரை உண்ணாவிரதம்' தொடுக்கலாமா என்ற எண்ணத்தை அவருடைய இறுதிக் காலத்தில் தொடர்ச்சியாக எழுப்பிக் கொண்டே இருந்தது. கடைசியில் ...ட அவருடைய உள்ளத்துக்கும் ஆத்மாவுக்கும் ...டையே நடந்து வந்த இந்த இடையீடு அற்ற ...ாராட்டமானது கொலைகாரனின் துப்பாக்கிக் ...ண்டுகளால்தான் ஒரு முடிவுக்குக் கொண்டு வரப் ...டதே தவிர வேறில்லை.

"இவ்வளவையும் கூட்டிக் கழித்துப் பார்க்கும் ...து, இன்று, நாடாளும் பொறுப்பில் இருக்கும் ...க்கார் காந்தீயத்துக்கு மிக மிக மாறானதோர் சர்க்... (A very un-Gandhian Government) என் ... தெள்ளத் தெளிய விளங்குகிறது.

... வேண்டியவர்கட்கும் சொந்தக்காரர்கட்கும் பதவி ...த்தரும் பித்தலாட்டம், ஜனநாயக உரிமைகள் ...க்கப்படும் கொடுமை, பிரிட்டானியர் ஆட்சியில் ...டிக்கப்பட்ட அதே முறைகளை நிலையாகக் கையா... தன்மை, திறமைக்கு மதிப்பற்ற நிலைமை, வெளி...டுத் தலைநகரங்களில், நம் நாட்டுக்கு உபயோக...ற காரியங்களுக்காக, உதவாக்கரைகளை, வெளி...டுத் தூதுவரென்றும் அதுவென்றும் இதுவென்... உயர் பதவி கொடுத்து தூக்கி வைத்து ஏராள...ன செல்வத்தை 'அது'களுக்காக வாரி இறைக்... தாராளம், அரசாங்கத்திற்கும் கொள்ளைக்கார...லாளிகளுக்குமிடையே உள்ள வெறுக்கத்தக்க ...ளக் காதல், 'பெர்மிட்' களைக் கொண்டு ...ள்ளை லாபம் சம்பாதிக்கவேண்டும் என்று ...எல். ஏ. க்களும் காங்கிரஸ் முக்கியஸ்தர்களும் ...ப் பிடித்தலையும் விபரீதம், ஒழுங்காக நடைபெறும் ...கார் காரியாலய நடைமுறைகளில் அருவறுக்கத் ... சொந்த இலாபங்களுக்காக அடிக்கடி குறுக்...'ஏதேதோ' செய்யும் மந்திரிகளின் நடத்தை ...வ்வளவையும் சேர்த்துப் பார்த்தால், மகாத்மா... ஆத்மீக வார்சுதார்கள் என்று பெருமையடித்...கொள்பவர்களும் இன்று சர்க்கார் பீடங்களை ...ங்கரிப்பவர்களும் ஆகிய காங்கிரஸ்காரர்கள் ...த்மாவின் உபதேசங்களை எவ்வளவு தூரம் காற்... பறக்கவிட்டுவிட்டார்கள் என்பது நன்கு புல...து!

—சுதந்த்ரா, 4-9-48 இதழ்

...தினசரி"யின் தகவல்

## பொதுக் கூட்டத்தில் பாபு தாண்டன் கண்ணீர்

### ...ங்கிரஸ்காரர்களிடையேயும் ஊழல்கள் ...மிகுவதை எண்ணி மனவருத்தம்

### பணத்திற்கும் பதவிக்கும் ஆத்மாவை இழந்துவிட வேண்டாம் என கோரிக்கை

...ற்று முன்தினம் காலையில் ஐக்கிய மாகாண ...ம்பிளி சபா நாயகர் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் ...டன் ஒரு காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் பேசு...ல், காங்கிரஸ்காரர்களிடையே லஞ்சம், உத்தி... வேட்டை, சலுகை முதலிய தீய பழக்கங்கள் இருந்துவருவதைப்பற்றி பிரஸ்தாபிக்கையில் கண்ணீர் விட்டுவிட்டார். அவருடைய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வடிந்தது. பேச முடியவில்லை. தொண்டையும் கம்மி தவித்தார். காங்கிரஸ்காரர்களிடையேயும் இப்படி ஊழல்கள் இருந்துவருவதைப் பற்றி கூறும்போது சபாநாயகர் ஸ்ரீ. தாண்டன் அவ்வளவு மன வேதனையை அடைந்தார்.

பிறகு ஸ்ரீ. தாண்டன் மெதுவாக சமாளித்துக் கொண்டு தளதளத்த குரலில் கீழ்வருமாறு கூறினார்:—

"இதுதானா சுயராஜ்யத்தினால் அடைந்த சன்மானம்? இதற்காகத்தானா நாம் இத்தனை காலம் போராடி, எவ்வளவோ கஷ்டங்களையும் பட்டு உயிர்களையும் பலி கொடுத்தோம்? என்னுடனிருந்த தேசபக்தர்கள் இவ்வளவு கேவலத்திற்குக்கூட போய்விடுவார்கள் என்பதை நான் அறிந்திருப்பேனேயானால், அடிமையாக இருப்பதே மேல் என்று இருந்திருப்பேன். தேசத்தின் சுதந்திரத்திற்காகப் போராடியவர்கள், தேசாபிமானிகள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களிடையே ஊழல்கள் மிகுந்திருக்கின்றன என்பதைப் பற்றி நான் கேள்விப்படும்போது என் நெஞ்சம் குமுறி அழுகிறது. பணத்தையோ பதவியையோ பெறுவதற்காக ஆத்மாவை இழந்துவிட வேண்டாம் என்று நான் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன்."

இக்கூட்டத்தில் ஸ்ரீ. புருஷோத்தம தாஸ் தாண்டன் பன்முறை அழுதுவிட்டார். இந்த வயோதிகர் இவ்விதம் கண்ணீர்விட்ட காட்சி எல்லோருடைய மனதையும் உருக்கிவிட்டது. யோக்கியமாக நடந்து கொள்ளத் தவறிவிட்ட காங்கிரஸ்காரர்களில் சிலரும் அக் கூட்டத்தில் இருக்கவே, ஜனங்கள் அத்தகையவர்களை நோக்க ஆரம்பித்துவிடவே, அவர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் தலைகுனிய வேண்டியதாயிற்று.

பாபு தாண்டன் ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி தலைவரானதிலிருந்து, பல காங்கிரஸ்காரர்கள் முறை தவறி நடந்துகொள்ளுகிறார்கள் என்று அவருக்கு அநேக புகார்கள் வந்துகொண்டிருந்தன. இதனால் அவர் அதிகமாக மனம் நொந்துபோயிருந்தார். "காங்கிரஸ்காரர்கள் செய்யும் தவறைப் பற்றிய புகார்களை என் முகத்தில் வீசும்போது வெட்கத்தால் என் தலை நாணுவதுடன் மனம் பதறுகிறது" என்றும் கூறினார்.

—தினசரி 7-9-48, பக்கம் 5, கலம் 5, 6.

**முக்கிய குறிப்பு:** சுதந்த்ரா, தினசரி, இரண்டும் சூனாமானா ஏடுகளல்ல! ஈரோட்டுப் பாதையில் செல்லும் அளவுக்கு உரம் படைத்த உள்ளமுடைய இதழ்களல்ல! பெரியாரின் தொண்டர்களால் நடத்தப்படும் பத்திரிகைகளல்ல! ஒன்று ஆரியரால் நடத்தப்படுவது, மற்றொன்று ஆரியதாசரால் நடத்தப்படுவது.

சுதந்த்ரா, ஆங்கிலத்தில் வெளிவரும் ஓர் ஆரிய ஏடு. காசா சுப்பாராவ் எனும் பார்ப்பனர் அதன் ஆசிரியர்!

(4-ம் பக்கம் பார்க்க)

**சாந்தியால் உலகம் தழைப்பது நன்றா?**

**சமயபேதம் வளர்த்தே தளர்வது நன்றா?**

# அறப்போர் வலுக்கிறது : அரசாங்கம் நடுங்குகிறது !

## இந்தி எதிர்ப்புப் போர் — புதிய அத்தியாயம்

### போர்வாள் ஆசிரியருக்கு மீண்டும் சிறைவாசம்

செப்டம்பர் 7 செவ்வாய்க்கிழமையன்று ஒரு மார்வாடி சிற்றரசர் சென்னை கவர்னரானார்—அதே நாளில் இந்தி எதிர்ப்புப் போரிலும் புதிய அத்தியாயம் ஆரம்பமாகிவிட்டது. அதற்கு முன் நாள் வரை பள்ளிக்கூடத்தின் முன் மறியல் செய்து வந்த அறப் போர் வீரர்களை 'லாரி 'யில் ஏற்றிச் சென்று எங்கோ பல கல் தூரத்துக்கப்பால் ஏதோ ஒரு காட்டில் அல்லது சவுக்குத் தோப்பில் அல்லது கொதிக்கும் பாலைவனம் போன்ற கடல் ஓர இடங்களில் தவிக்க விட்டுவிட்டு திரும்பி வரும் வெல்லிங்டன் தர்பார் நடத்தி வந்தது சென்னை சர்க்கார். ஆனால் செப்டம்பர் 7 முதல் சர்க்காரின் போக்கு மாறிவிட்டது. செப்டம்பர் 6ந் தேதி இரவு, தோழர்கள் என். வி. நடராசன், சி. டி. டி. அரசு, எம். கே. தங்கவேலர், தங்கராஜ், சி. வி. ராஜன், எம். கே. டி. சுப்ரமணியம், வி. டி. பெரியசாமி; என். எம். சுப்ரமண்யம் முதலானவர்களையும் இது நாள் காறும் மறியல் செய்து வந்த கலைச் செல்வன் முதலான எண்மரையும் திடீரென்று சிறையில் அடைத்து விட்டது, அடைத்து விட்டதால் மறு நாள் காலை சென்னையில் மறியலும் நடக்காது என்று மனப்பால் குடித்தது சென்னை சர்க்கார்—ஆனால் முற்றிலும் ஏமாந்தது!

பொழுது புலர்ந்ததும் **போர்வாள் ஆசிரியர் காஞ்சி மணிமொழியார்** தலைமையில் எஸ். வி. ராசன், எம். கோவிந்தன், பிரகலாதன் முதலானோரைக் கொண்ட புதியதோர் அணிவகுப்பு காசிவிஸ்வநாதர் கோயிலிலிருந்து புறப்பட்டது மறியலுக்கு! மறியல் தொண்டர்களையும் சென்னை முக்கியஸ்தர்களையும் முன்னாள் இரவே சிறைப்படுத்திவிட்டதால் மறியலே நடைபெறாது என்று எண்ணியிருந்த சர்க்கார், புதிய தொண்டர் படை புறப்பட்டது கண்டதும் நடுநடுங்கிவிட்டது. அந்த நடுக்கம், என்ன ஆனாலும் சரி, மறியல் தொண்டர்களைச் சிறைபிடித்து அதன்மூலம் இயக்கத்தை மேலும் மேலும் பிரபலப்படுத்துவது மட்டும் கூடாது, கூடவே கூடாது என்று சர்க்கார் இதுவரை கொண்டிருந்த திடசித்தத்தையும் சிதைத்துவிட்டது. அன்றைய கேப்டன் மணிமொழியாரையும் ஏனைய படைவீரர்களையும் சிறை பிடித்தே தீரவேண்டிய கட்டாயத்திற்கு வந்துவிட்டனர் சர்க்கார். எனவே அவர்கள் பள்ளி இருக்கும் திக்கு நோக்கிப் புறப்பட்டதும் கைது செய்யப்பட்டனர். அதே நேரத்தில் தோழர் துரைராஜ் தலைமையில் வேறோர் குழு முத்தியாலுப்பேட்டை பள்ளிமுன் மறி
யல் செய்தது—மறியல் மு...
தும் அக் குழுவினரும் கைது ...
யப்பட்டனர். காஞ்சி மணிமொ...
யார் உட்பட இரு குழுவின...
சேர்ந்து மொத்தம் 16 பேர். ...
வொருவருக்கும் ஒரு வார சி...
தண்டனை விதித்தார் மாகா...
இரண்டாவது நீதிபதி. மகிழ்...
யுடன் தண்டனையை ஏற்று சி...
கோட்டம் புகுந்தனர் அனைவரு...

மறுநாள் 8-9-48 புதன...
**காப்டன் C. D. T. அரசு** தலை...
யில் ஒரு குழுவும் காப்டன் கண்...
பிரான் தலைமையில் ஒரு குழு...
காப்டன் சம்பந்தம் தலைமை...
ஒரு குழுவும் ஆக 23 பேர் மறி...
துவக்க இடத்திலும் பள்ளி மு...
மாக கைது செய்யப்பட்டு ஆளு...
ஒரு வாரம் தண்டிக்கப்பட்ட...

9-9-48 வியாழனன்று மூ...
குழுவினரும் அடுத்த நாள் வெ...
யன்று இருகுழுவினரும் அதே...
ன்று சிறை பிடிக்கப்பட்டுள்ள...

'விடுதலை'—நம் தினசரி—...
யிருப்பது போல சிறைச்...
செந்தமிழரைக் கூவி அழை...
தொடங்கிவிட்டது. இனி ஆ...
ஆயிரமாக தமிழர்கள் சிறை...
வைக்கப்படுவர், ஐயமில்லை. சி...
கதவைத்திறந்துவிட்டனர் சென்...
சர்க்கார். இனி அவர்கள் ...
மூடமுடியாது. இந்தி ஒழியும் ...
மூடமுடியாது. ஆம், நிச்சயம்!

(3–ம் பக்கம் தொடர்ச்சி)

7-வது பக்கத்திலே இந்தக் கண்டனம் இருக்கிறது: ஆனால் 9-வது பக்கத்திலே சுயமரியாதைக் காரர்களை **விஷ வியாபாரிகள்** என்று அர்ச்சிக்கிறார் அவ் வேதவேதியர்! அந்த அளவுக்கு ஆரியப் பித்தம் தலைக்கேறிய அந்தணாளர் அவர்!

"தினசரி"யோ ஒரு திராவிடரால் நடத்தப்படுவது என்றாலும் தமிழர்களின் தீரப் போரை இந்தி மறியல் நாடகம் என்று மனம் துணிந்து எழுதும் அளவுக்கு மரத்துப்போன உள்ளம் படைத்த — ஆரிய செல்லரித்த—திராவிடர் அவர்!

உண்மையை புளுகு மூட்டைகளுக்கு உள்ளே ஒளித்து வைப்பதே இந்த இரு ஏடுகளின் வழக்கமான தொழில். ஆனால் எப்படியோ இம்முறை, இரண்டும் வாய் தவறி, உண்மையை உரைத்துவிட்டன.

அதோ யாரோ தெருவில் பாடிக்கொண்டு போ...றார்கள் :

**"ஒருநாள் ஒருபொழுதாகிலும்**
**உண்மை உரைக்கவேண்டும்......"**

---

**போர்வாள் அடுத்த இதழ்**

★

**பெரியார் பிறந்த நாள் வெளியீ...**

★

**விலை அணா 2**

---

## மாந்தரிற் சாதி வகுப்பது சரியா ?

# நினைவும் கனவும்!

**வ. உ. சி:** மனிதகுல மாணிக்கமே, மாவீரரே வருக! உலகம் தொழுதிடும் உத்தமா வருக! அரை உடை தரித்த அண்ணலே வருக! விடுதலைப் போர் புரிந்த வித்தகா வருக! அகவை எண்பது உற்ற ஆண்டகையே வருக! பத்தரை மாற்றுப் பசும்பொனே வருக! வருக வருக தங்கள் வருகை நல் வரவாகுக.

**காந்தியார்:** ஆ! மீண்டும் தமிழ்க்குரல் கேட்கிறேன்! களிக்கிறேன்! தென்னாப்பிரிக்காவில் கேட்ட தமிழ், அறப்போரில் அன்றைக்கு குதித்திட்ட தமிழ்க் காளைகள் பேசிய தமிழ், வள்ளியம்மையின் வாயிலே தவழ்ந்த தமிழ், ஈரோட்டு மறியல் தலைவியர்கள் நாகம்மையார் கண்ணம்மாள் இருவரும் பேசக்கேட்ட தமிழ், இன்பத்தமிழ், திருக்குறளை நான் கண்ட தமிழ் அந்தத் தமிழை மீண்டும் கேட்கிறேன்! இன்புறுகிறேன்! அதிருக்கட்டும் சிதம்பரம், தங்களைப் பார்க்க வேண்டும் பார்க்க வேண்டும் என்று எத்தனையோ நாட்களாக எண்ணிக்கொண்டிருந்தேன், இன்றுதான் பார்க்க முடிந்தது. பார்ப்பது மட்டுமா, இனி என்றென்றும் நாம் ஒன்றாகத்தானே இருக்கப்போகிறோம், ஆகவே ஒன்று கூட முடிந்தது என்று சொல்ல வேண்டும், ஆம் அதுதான் சரி, நாம் ஒன்றாய் இருக்க முடிந்தது, இணைந்து வாழ முடிந்தது.

**வ. உ. சி:** உத்தமத் தலைவரே, நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்—உங்களை நான் எவ்வளவோ எதிர்த்திருக்கிறேன் அந்தக் காலத்தில்!

**காந்தியார்:** மன்னிப்பதா, யார் யாரை மன்னிப்பது! கப்பலோட்டிய தமிழரே, மாவீரரே, உம்மை நான் மன்னிப்பதா என்ன வார்த்தை கூறினீர்! உம்மை மன்னிக்கப் போவதில்லை நான், வாழ்த்தப் போகிறேன், பாராட்டப் போகிறேன், போற்றிப் புகழ்ந்து பூமாலை சூட்டப் போகிறேன், வாழிய சிதம்பரம் என வாழ்த்துரை வெண்பா வாசிக்கப் போகிறேன்! ஆமாம், தாங்கள் சொன்னதெல்லாம் உண்மையாய் விட்டது, அந்தக் காலத்தில் தாங்கள் என் தத்துவங்களைத் தாக்கியபோது தாங்கள் ஏதோ உணர்ச்சி வேகத்தில், இளமை முறுக்கில் அப்படிச் செய்வதாக எண்ணினேன், ஆனால் இன்றுதான் தாங்கள் தாக்கியதன் உண்மைக் காரணத்தை உணர்ந்து கொண்டேன், சிதம்பரம், தாங்கள் நல்ல தீர்க்கதரிசி.........

**வ. உ. சி:** ஆ! நில்லுங்கள்! இதென்ன! தங்கள் திருமார்பிலேயும் மணிவயிற்றிலேயும் குண்டு பாய்ந்த வடுக்கள்! இரத்தக் கறையும் தென்படுகிறதே! என்ன, என்ன நடந்தது இந்தியாவில், மண்ணுலகில்!

**காந்தியார்:** சிதம்பரம், சொல்கிறேன்! எல்லாவற்றையும் சொல்கிறேன்! கொஞ்சம் பொறுங்கள்!

**வ. உ. சீ:** அடிகளே, இதென்ன எல்லாம் ஒரே புதிராய் இருக்கிறது! தங்கள் பாதை இந்திய விடுதலைக்கான வெற்றிப்பாதை என்பதை அறியாமல் தங்களுடைய அஹிம்சா தத்துவத்தை, சாத்வீக சட்டமறுப்பை, அன்று நான் எதிர்த்தேன்! அரசியலில் அது நடவாது முடியாது என்று கூறினேன், காங்கிரஸ்வாதிகள் அஹிம்சாவாதிகளாக முற்றிலும் நடந்துகொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது என்று பற்பல கூட்டங்களில் முழக்கமிட்டேன், காந்தீயம் என்பது கவைக்குதவாது என்று உரை பல புகன்றேன், இன்றோ, அதே காந்தீயம் இந்தியாவை வெற்றிபுரிக்கு அழைத்துச் சென்றுவிட்டது, விடுதலை இன்பத்தை வாங்கித் தந்துவிட்டது, வெள்ளைத்துரை மகனைக் கப்பலேற்றி அனுப்பிவிட்டது, எந்த காந்தீயம் இந்திய விடுதலையை வாங்கித் தராது என்று நான் மனமார எண்ணினேனோ அதே காந்தீயம் இன்று வெற்றி விழாக் கொண்டாடிவிட்டது, எனவே நான் மன்னிப்புக் கேட்கிறேன், நீங்களோ "நீ தீர்க்கதரிசியப்பா, நீ கூறியது உண்மையாய் முடிந்ததப்பா, உனக்கு நான் வாழ்த்துரை கூறுவேனப்பா" என்று பேசுகிறீர்கள்! தங்கள் மார்பிலோ துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்த வடுக்கள் இருக்கின்றன, எனக்கு ஒன்றுமே புரியவில்லையே, ஈதெல்லாம் என்ன பொருள் குறித்தன, யாது இவற்றின் கருத்து, அடிகாள் உரைதர வேண்டுகிறேன்.

**காந்தியார்:** சிதம்பரம், நீங்கள் கூறுவதெல்லாம் உண்மை. ஆனால், "உண்மை", நீங்கள் கூறுகின்ற அளவோடு நிற்கவில்லை, மேலும் கொஞ்சம் செல்கிறது. ஆம் நான் வென்றேன். அது உண்மை. ஆனால் அது மட்டுமல்ல உண்மை. அந்த வெற்றியிலே தோல்வி கண்டிருக்கிறேன் நான்.

**வ. உ. சீ:** வெற்றியிலே தோல்வியா......எனக்கு விளங்கவில்லையே...புதிர் மேலும் மேலும் வளர்கிறதே தவிர விளக்கம் பிறக்கவில்லையே...அந்த துப்பாக்கிக் காயம் எப்படி வந்தது...அதற்கும் நீங்கள் கூறும் இதற்கும் என்ன தொடர்பு..... கொஞ்சம் விளக்கக் கூறுங்கள்.

**காந்தியார்:** சொல்கிறேன், எல்லாவற்றையும் சொல்லுகிறேன்.......... உதட்டளவில் அஹிம்சை பேசுவரேயன்றி உள்ளத்தில் அஹிம்சை கொள்ள மாட்டார்கள் உம்பக்தர்கள் என்று அன்று நீங்கள் சொன்னீர்கள் அல்லவா......

**வ உ. சீ:** ஆமாம்!

**காந்தியார்:** பலாத்காரம் வேண்டாம் என்பர்,

(8-ம் பக்கம் பார்க்க)

## மக்கள் ஒரே குலமாய் வாழ்வது சரியா?

# இந்த முப்பது நாட்கள்!

ஆகஸ்டு 10—அறப்போர் ஆரம்பமான நாள்!

இன்று தேதி செப்டம்பர் 11!

அந்தப் பத்துக்கும் இந்தப் பதினொன்றுக்கும் இடையே இருப்பன முப்பது நாட்கள்!

ஆம், முப்பது நாட்கள் முடிந்து விட்டன நம்முடைய போராட்டம் தொடங்கி!

முப்பது நாட்கள்! நமக்கு!—ஆனால் முப்பது வெடி குண்டுகள்—சர்க்காருக்கு!

ஒவ்வொரு நாள் பிறந்ததும் தங்கள் அதிகார பீடத்தின்மீது ஒவ்வொரு வெடிகுண்டு வீசப்படுவதாகவே எண்ணி நடுங்கி வருகின்றனர் ஆளவந்தார்கள்.

தமிழா உன் தோள் வலிமை தரணி எலாம் அறியாதோ என்பது நாடறிந்த கீதம், ஆனால் அதை நானிலம் ஆளவந்த இந்த ஓமந்தூரார்கள் அறியவில்லை —அன்று! அறிந்து அவதிப்படுகின்றனர்—இன்று! 'அன்று'க்கும் 'இன்று'க்கும் இடையே ஒரே ஒரு வேறுபாடு, ஆனால் மகத்தான வேறுபாடு, அன்று, தமிழன் களத்திலே நிற்கவில்லை, அமைதி புரியிலே இருந்து கொண்டு சமாதான கீதம் வாசித்துக் கொண்டிருந்தான். ஆனால் இன்றோ அவன் செருக்களத்திலே நிற்கிறான், போராடிப் போராடிப் பண்பட்ட பரம்பரையிலே வந்தவன் அவன், எனவே அவனுடைய போராட்டம் சகல வல்லமை பொருந்திய சர்க்காரையும் திக்குமுக்காடச் செய்கிறது. தமிழன் இவ்வளவு ஆற்றல் படைத்தவன் என்பதை ஓமந்தூரார்கள் **அன்று** அறியவில்லை—**அன்று** என்றால் ஆகஸ்டு 10க்கு முன்பு! அறிந்திருந்தால் தமிழனை சமர்க்களத்திற்கு வருக என அறைகூவி அழைத்திருக்கமாட்டார்கள். இன்று அறிகின்றனர், தமிழனின் திறமையை உணர்கின்றனர், புலி வில் கயல் கொடி மூன்றினால் புதுவானம் எங்கும் எழில் மேவச் செய்த மூவேந்தர் சந்ததியின் தோள் வலியையும் 'வாள்' வலியையும் தெள்ளத் தெளியக் காண்கின்றனர், ஆப்பசைத்த் குரங்கானோமே. என்னே நம் கெடுமதி என்று வேதனை வெண்பா வாசிக்கின்றனர் —வெளிப்படையாக அல்ல, வெளிப்படையாக அதையா வாசிப்பார்கள், வாசித்தால் பலம்பொருந்திய 'சர்க்கார்' என்ற கௌரவம் தங்குமா, வெளிப்படையாக வாசிப்பது போலீஸ் தர்பார் என்ற வெலிங்டன் அகராதி, ஆனால் மனத்திற்குள்ளாக வாசிக்கின்றனர் வேதனை வெண்பாவை, அது நமக்கு நன்றாகக் கேட்கிறது.

உள்ளபடியே, 'வேதனை', விபரீத செயல் புரிந்த இந்த விசித்திரமான மந்திரிகளின் உள்ளத்தைக் குத்திக் குடைகிறது, வேதனை மட்டுமா, அல்ல அல்ல, தோல்வி தம் தோள்களைத் தழுவுகிறதே என்ற வெட்கமும் வெற்றி இந்தி எதிர்ப்பாளர் பக்கம் விரைந்து போகிறதே என்ற அச்சமும் கூடத்தான் அவர்களைப் பிய்த்துப் பிடுங்குகிறது. ஆகாத காரியம் புரிந்தோமே அடுக்குமா இது என்று அவர்கள் மனச்சான்று அடிக்கடி அவர்களைக் கேட்கிறது, கேட்கும்போதெல்லாம் துக்கம் ஒருபுறம் துளைக்கிறது அவர்கள் உள்ளத்தை, வெட்கம் ஒருபுறம் வாட்டுகிறது அவர்கள் தன் மானத்தை. இந்தப் பாழும் "கௌரவம்" மட்டும் குறுக்கே வராமல் இருந்தால் இந்த முப்பது நாட்களுக்குள்ளாக, இந்தி, நிச்சயம் எடுபட்டுப் போயிருக்கும், ஆனால் கௌரவம் ஒன்று இருக்கிறதே ஊராளும் கனவான்கள் என்ற பட்டம், அதுதான் அவர்கள் கையைப் பிடித்து இழுக்கிறது, இந்தி உத்தரவை மாற்றாதே என்று கூறுகிறது. என்செய்வர் அமைச்சர்கள்! மனச்சான்று, இந்தி வேண்டாம் என்கிறது! கௌரவம், அது சரி ஆனால் போட்ட உத்தரவை இந்தி எதிர்ப்புப் பேர்வழிகளுக்காக மாற்றுவதா என்று கேட்கிறது! இந்த இரு தலைக் கொள்ளியிற் சிக்கிய எறும்பாகத் தவிக்கிறார்கள் நம் அமைச்சர் பெரு மக்கள்! பாவம்! பரிதாபம்!

இந்த முப்பது நாட்களுக்குள்ளாக, நமது போராட்ட அனல் இந்த மந்திரிமார்களை எவ்வளவு வாட்டிவிட்டிருக்கிறது! இந்தி எதிர்ப்புப் புயல், இந்த ஒரு மாத காலத்திற்குள்ளாக, இந்த ஆளவந்தார்களை எத்தனை 'திடீர் பல்டி' அடிக்கச் செய்திருக்கிறது! நினைத்துப் பார்த்தால் எவ்வளவு இரக்கம் பிறக்கிறது இந்த ஓமந்தூரார்கள் மீது நமக்கு! ஐயோ பாவம்! நெருப்பு சுடும் என்பதை அறியாது, நெருப்பிலே விரலை நுழைத்துவிட்டு, இன்று விரல் நசுங்கிவிட்டதே என்று எவ்வளவு கண்ணீர் சொரிகிறார்கள்—இரகசியத்தில்! மறைமுகமாக! ஆற்றுவாரும் தேற்றுவாரும் இல்லாமல்! பரிதாபக் காட்சி! "செ! செ! என்ன ஜென்மம் எடுத்தாலும் எடுக்கலாம் இந்த மந்திரி ஜென்மம் மட்டும் எடுக்கக்கூடாது" என்று யாரோ ஒரு ஜெர்மானியக் கவிஞன் கூறினானே அது எவ்வளவு உண்மை!

எண்ணி 32 நாட்களாகவில்லை நம் அறப்போர் தொடங்கி! இதற்குள் எத்தனை தரம் "மூர்ச்சித்து" வீழ்ந்து விட்டார்கள் இந்த அமைச்சர்கள்! எத்தனை முறை சொன்ன சொல் தவறி நடந்து கொண்டிருக்கிறார்கள்! எத்தனை முறை தலைகீழ் பல்டி போட்டிருக்கிறார்கள்! இவ்வளவுக்கும், நாம, நம்முடைய பாசறையில் இருக்கும் எண்ணற்ற ஆயுதங்களை இன்னும் களத்திற்குக் கொண்டுவரவில்லை, நம் அணிவகுப்புகளிலும் ஒன்றிரண்டைத் தவிர ஏனையவை இன்னமும் பாடி வீட்டிலேயேதான் இருக்கின்றன—களத்திற்கு வரவில்லை, நம்முடைய போர் முறைகளிலும் பலவற்றை நாம் இன்னமும் பயன்படுத்தவே இல்லை, நம்முடைய 'துருப்புச் சீட்டு' எது என்பதோ, அது எப்போது வீசப்படும் என்பதோ, அது எதற்காக இன்னமும் வீசப்படாமல் இருக்கிறது என்பதோகூட இந்த அமைச்சர்களுக்குத் தெரியாது, புதிய புதிய களங்களை நாம் ஏற்படுத்த முடியும், திடீர் தாக்குதல்களை நம்மால் நடத்த இயலும், இடுக்கித் தாக்குதல் முறைகளும் நம்மிடம் ஏராளம், ஆனால் நாம் இந்நாள்வரை இவற்றிலே எதையும் பயன்படுத்தினோமில்லை, நாம் இதுவரை செய்திருப்பதெல்லாம், சென்னையில், ஒரு பள்ளியில் முதல் இரண்டு வாரங்களும் மற்றொரு பள்ளியில் அடுத்த இரு வாரங்களும் மறியல்! ஆச்சாரியார் வந்தபோதும் மார்வாடி கவர்னர் பதவி ஏற்றபோதும் கறுப்புக் கொடி காட்டி வெறுப்பை சாந்தமான முறையில் மிக மிக அமைதியாகத் தெரிவித்துக் கொள்ளல்! இந்த இரண்டுதான்! இதற்கேதான் இந்த சர்க்கார் இவ்வளவு மிரண்டு விட்டது! இனி, நாம், நம்முடைய எல்லாவிதமான போர் முறைகளையும் கையாண்டு, நம் பாசறையில் குவிந்துகிடக்கும் அவ்வளவு படைக்கலங்களையும் களத்திற்கு அனுப்பி, படை வீட்டில் 'முகாம்' போட்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான போர் வீரர்களையும் செருமுனைக்குச் செலுத்தி, முழுமூச்சுடன் போராடத் தொடங்கினால் இந்த சர்க்கார் சுருண்டு விழுந்துவிடும் போலிருக்கிறதே சாக்காட்டுக் குழியில்!

மறியல் தொண்டர்களை நாங்கள் 'சட்டை' செய்யவே போவதில்லை—தானே சுருண்டுவிடும் இயக்கம் என்றார்கள், இன்றோ மறியல் தொண்டர்களை, ஓடி ஓடி 'அரெஸ்ட்' செய்கிறார்கள்!

சிறைவைப்பதன் மூலம் இச்சூனாமானைக்களை தியாக பூமியில் உலவிடும் உத்தமர்களாக மக்கள் மனத்திரையில் 'படம்' விழும்படிசெய்யமாட்டோம் என்று சுவைபடப் பேசினார்கள், பேசிய பேச்சு காற்றிலே கலப்பதற்கு முன்னாலேயே திராவிடக் கழக நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்துக்குள் புகுந்து நூறு பேரை மின்னல் வேகத்தில் திடுதிப்பென கைதிகளாக்கினார்கள்!

அமைதியான முறையில் இயக்கம் நடந்தால் அதை நாங்கள் தடுக்க மாட்டோம் என்று 'காந்தீயம்' எழுதினார்கள், எழுதிய மை உலரக்கூட இல்லை, அதற்குள்ளாக கூட்டங்களா—லைசென்ஸ் இல்லை! ஊர்வலங்களா— 144! மறியலுக்குப்பின் கலைந்து போகும் போது இந்தி ஒழிக முழக்கமா—தடியால் அடி என்று கட்டளைகளை வீசுகிறார்கள்!

பெரியாரைக் கைது செய்வதா—அந்தப் பெரும் 'பாவம்' எங்கள் ஆட்சியிலா நடக்கும்—ஒரு போதுமில்லை என்று பெரியாரிடமே கூறினார்கள், கூறி பத்து நாள் ஆகவில்லை, பெரியாரை வெப்ப மிகு சிறையிலே வைத்து வாட்டினார்கள்!

புசு புசுத்துப் போகும் தன்னாலே—கவலை கொள்ளாதீர்கள் சிஷ்ய கோடிகளே என்று மகுடி வாசித்தார்கள் ஒரு நாள்! வாசித்த மறுநாள் முதல் செல்லும் இடம்தோறும் இடம் பொருள் ஏவல் இன்னது என்று கூடப் பாராது இந்தி எதிர்ப்பு இயக்கத்தைப் பற்றியே பேசித் தீர்க்கிறார்கள்!

அடே அப்பா! முப்பதே நாட்கள் நாம் போர் நடத்தி இருக்கிறோம், அதற்குள்ளாக எவ்வளவு ததிங்கிணதோம் போடுகிறது இந்த அற்புதமான சர்க்கார்! எவ்வளவு குறைவான 'விலை'யில் எவ்வளவு மகத்தான வெற்றி பெற்றிருக்கிறோம் நாம்! இன்னும் இரண்டொரு மாதங்கள் போர் நீடித்தால், பிறகு, இந்த சர்க்கார் தற்கொலையேகூட செய்து கொள்ளும் போலிருக்கிறதே போரின் வேகம் தாங்கமாட்டாது!

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளைபோல, அவினாசியார்கள், நேற்றுகூடிய சட்டசபையிலுங்கூட இந்தி கட்டாயமில்லை என்று இருபத்தெட்டாவது முறையாகப் பொய்யுரைத்தாலும், அந்தப் பொய்யுரைக்கும் காலத்திலே கொஞ்சம் கம்பீரத்தொனியை வலிந்து வரவழைத்துக் காட்டினாலும் நமது முப்பது நாள் போராட்டம் இந்த சர்க்காரின் சித்தத்திலே சோகத்தை மூட்டி இருக்கிறது, சோகம் தோல்வியின் முதல் கட்டம், எனவே சர்க்கார் இந்த ஆணவப் பாதையிலே சருக்கிவிழுவது உறுதி, உறுதி என்பதை நாம் கூறத் தேவையில்லை, சர்க்காரின் 'அவசர அரெஸ்ட்டு'களே அழகாகக் கூறுகின்றன அதனை!



## செந்தமிழை வெறுக்கும் விக்னேஸ்வரர்!

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வரர் என்று நீர் சூட்டிக்கொண்ட பட்டப் பெயரையே திரும்பத் திரும்பக் கையாண்டு உம்மையும் ஏமாற்றி எம்மையும் ஏமாற்றிக் கொள்வானேன், இனி கொஞ்சம் வெளிப்படையாகவேதான் பேசுவோமே!—விக்னேஸ்வரர் என்ற புனைபெயருக்குள் மறைந்திருக்கும் தெலுங்குப் பார்ப்பன எழுத்தாளரே, நெஞ்சில் கை வைத்துக் கூறும், தூய தமிழ் ஒரு செல்லாக் காசு என்று நீர் மனமார எண்ணுகிறீரா? இல்லையே! இல்லையானால் ஏன் மனந்துணிந்து இத்தகைய பச்சைப் புளுகுகளை அளந்து வைக்கிறீர்! உயர்ந்த எழுத்தாளர் என்று உம்மை குறிப்பாகவும் வெளிப்படையாகவும் அடிக்கடி கூறிக்கொள்கிறீரே இதுதானா உயர்ந்த எழுத்தாளத் தன்மை! நாளுக்கு நாள் மிக்க செல்வாக்கு பெற்று வளர்ந்துவரும் தனித் தமிழ் இயக்கத்தை செல்லாக் காசு என்று கூறுகிறீரே இந்தப் புளுகு கந்த புராணத்திலும் உண்டா? ஏனய்யா ஆரிய எழுத்தாளரே, ஏன்தானோ நீர் இவ்வளவு மட்டரகம் ஆகிவிட்டீர்!

தனித் தமிழ்க் கிளர்ச்சியை முட்டாள்தனமான இயக்கம் என்று முட்டாள்தனமாகக் கூறுகிறீரே எந்தக் காரணத்தால் இப்படிக் கூறுகிறீர்—காரணம் காட்டமுடியுமா உம்மால்! பிற சொற்களைக் கலப்பதால் அவற்றிற்கு நேரான தமிழ்ச் சொற்கள் மறைந்து போகின்றன, தமிழின் அழகு சிதைகிறது, தமிழின் இலக்கண இலக்கிய அமைப்புக்கும் ஒழுங்கு முறைக்கும் பொருத்தமற்ற பிற சொற்கள் வந்து கலப்பது இசை நயத்துக்கும் இலக்கிய அழகுக்கும் கேடு விளைக்கின்றது, தமிழ்ச்சுவை அதனால் கெடுகின்றது. ஆகவேதான் தனித்தமிழ் வேண்டும் என்று நாங்கள் கூறிவருகிறோம், கிளர்ச்சியும் நடத்திவருகிறோம், இதை முட்டாள் தனம் என்கிறீரே அப்படியானால் புத்திசாலித்தனம் எது, இனிய தமிழிலே வடமொழிப் புளிச் சுவையைக் கலப்பதா, ஏனய்யா ஆரிய எழுத்தாளரே அதுவா உம் கருத்து!

'விக்கினேஸ்வரர்' என்ற புனைபெயர் முகமூடியை அணிந்து கொண்டு வரைதுறையின்றி ஆரிய விஷத்தை, ஆங்கில ஏட்டின் வழி, நாட்டிலே பரப்பி வரும் காசா சுப்பாராவ் அவர்களே, உங்கள் இனத்தவர் எதைச் சொன்னாலும் எங்கள் இனத்தவர் "ஆமாம் சாமி" போட்டுக்கொண்டிருந்த காலம் மலையேறி விட்டது, அந்தப் பழைய நினைப்பிலே, இக் காலத்திலும் எதைச் சொன்னாலும் திராவிடர்கள் ஏற்றுக் கொள்வார்கள்என்ற எண்ணத்திலே,பழையபடி விஷ விதைகளைத் தூவாதீர், திராவிடர்கள் இக் காலத்தில் விழித்துக் கொண்டிருக்கின்றனர், தூங்கிக் கொண்டில்லை! திராவிடர் உள்ளத்தை, பின் விளைவு அறியாது, புண்படுத்தாதீர் புண்படுத்தினால் வேல்பட்ட வேங்கை என சீறி எழுவர் திராவிடர் எழுந்தால், நீரும் உம் கூட்டத்தவரும் தப்பமுடியாது — நினைவிருக்கட்டும் ஆழந் தெரியாமல் காலை நுழைத்துவிட்டு பிறகு அவதிப்பட வேண்டாம்!

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனல் ஆட்சி தம் கைக்கு வந்தால் காந்தீயவாதிகளும் பலாத்காரச் செயல் புரியத்தான் செய்வர் என்று கூறினீர்கள் அல்லவா......

**வ. உ. சி:** ஆமாம்!

**காந்தியார்:** இராணுவம்கூடாது பட்டாளம்கூடாது' சர்க்கார் பீடத்திலும் கூட ஹிம்சை சிறிதளவும் இருக்கக் கூடாது, நான் கனவு காணும் இராமராஜ்யத்தில் இவை எல்லாம் இருக்காது என்று நான் கூறியபோது இது வெறும் கனவு என்று கூறினீர்கள் அல்லவா.. ...

**வ உ. சி:** ஆமாம்.

**காந்தியார்:** சாத்வீக ஒத்துழையாமையில் ஈடுபடும் எல்லாரும் உண்மை சத்யாக்ரகிகளாக இருக்க மாட்டார்கள் ஆகவே இவர்களைக் கொண்டு அஹிம்சைப் போர் நடத்துவது சரியல்ல என்று கூறினீர்களல்லவா?

**வ. உ. சி:** ஆமாம்..... அதற்கெல்லாம் இப்போதென்ன?

**காந்தியார்:** அவையெல்லாம் இப்போது உண்மையாகி விட்டது. என் பக்தர்களிடம்தான் ஆட்சி வந்திருக்கிறது. என் சிஷ்யர்களிடம்தான் செங்கோல் வந்திருக்கிறது. என்னை நித்த நித்தம் பூஜித்து வந்த அத்தியந்த நண்பர்களிடம்தான் இந்திய சர்க்கார் எனும் இயந்திரத்தின் சாவி கிட்டியிருக்கிறது. நீ கூறுவதுபோல, இந்த வெற்றி என் தலைமையில் நடந்த போராட்டங்களின் விளைவு என்று கூறுவதில் தவறு இல்லைதான், என்ருலும், அவர்கள் ஆட்சிப் பீடம் ஏறியதும் எந்தக் காந்தீயத்தால் விடுதலை ஆட்சியை அவர்கள் பெற்ருர்களோ அந்த காந்தீயத்தையே உதறித் தள்ளிவிட்டார்கள். இராணுவமே இருக்காது எங்கள் ஆட்சியில் என்று பேசினவர்கள் சிறு கூட்டங்களைக் கலைப்பதற்கும் இராணுவத்தைக் கையாளத் தொடங்கிவிட்டார்கள். அஹிம்மைம அஹிம்சை என்று பஜனை செய்தவர்கள் கிளர்ச்சிக் குரல் எழுப்புபவர்கள மீதெல்லாம் துப்பாக்கிக் குண்டுகளைப் பாய்ச்சத் தொடங்கிவிட்டார்கள். தொழிலாளர்கள் மீது தினம் தினம் தடியடி நடத்துகின்றனர் இந்த சாத்வீக சட்ட மறுப்பாளர்கள்! கண்ணீர்ப் புகையை மக்கள் ஊர்வலங்களின்மீது இவர்கள் ஏவாத நாள் இல்லை! பொதுச் கூட்டமா, தடைவிதிக்கிருர்கள்! பத்திரிகையா எடு ஜாமீன் என்கிருர்கள்! ஆளவந்தார்களைக் கண்டித்தனரா அடை சிறையில் என்று பேசுகிருர்கள், மறியல் செய்தனரா ஆறு மாதம் கடுங்காவல் என்கிருர்கள், கருப்புக் கொடி பிடித்தால் குண்டாந்தடியால் நையப் புடைக்கிருர்கள். மாபெருந் தலைவர்களையும் இரும்புக் கம்பிகளுக்குப் பின்னல் நிறுத்துகிருர்கள். கல் உடைக்கவும் அரக்குக் காய்ச்சவும் கடின வேலைகள் செய்யவும் அத் தலைவர்களைக் கட்டளை இடுகிருர்கள். தங்கள் ஆட்சியில் பல ஜலியன் வாலாபாக்குகளை நடத்துகிருர்கள். எந்தெந்த கிரிமினல் சட்டங்களை சாத்தான் சட்டங்கள் என்று இவர்கள் ஏசினர்களோ அதே சட்டங்களை இன்று மக்கள்மீது பாய்ச்சுகிருர்கள். பதவி வேட்டை, லஞ்சம், ஊழல், அதிகார மோகம், ஆணவம், பித்தலாட்டம் சர்வமும் இவர்களிடம் குடிகொண்டு விட்டன. அந்தோ என் உள்ளம் உருகுகிறது இவர்கள் செயல் கண்டு. இதற்குத்தான நான் பாடுபட்டேன்! இதற்குத்தான நான் போர் பல புரிந்தேன்! இதுவா விடுதலை? இந்த 'விடுதலை'க்கா நான் இத்தனை ஆண்டுகளாக என் வாழ்க்கையை, என் வாழ்க்கையை மட்டுமா எண்ணற்ற இந்தியர்களின் வாழ்க்கையைத் தத்தம் செய்தேன், வீர வாலிபர்களை ஆயிரம் ஆயிரம் என தியாகத் தீயில் குதிக்கச் செய்தேன், இவர்களா என் பக்தர்கள்...... இவர்களா என் சிஷ்யர்கள்...... இவர்களை எண்ணினலும் என் கண்கள் கலங்குகின்றன......

**வ. உ. சி:** அடிகாள், பொறுங்கள் பொறுங்கள். இப்படியா செய்தனர் இக் காந்தீயவாதிகள். நீங்கள் துக்கம் தோய்ந்த உள்ளத்தோடு இவ்வார்த்தைகளைக் கூறக் கூற என் உள்ளமும் துடிக்கிறது என் குருதி கொதிக்கிறது......

**காந்தியார்:** அப்பா சிதம்பரம், நீ சொன்னதெல்லாம் உண்மையாகிவிட்டது. நீங்கள் சொன்னதெல்லாம் உண்மையாகி விட்டது. காந்தீய தத்துவத்தை, நடைமுறையில் கையாள மாட்டார்கள் காந்தி பக்தர்கள் என்று கூறிவருவீர்களே, அது முற்றிலும் உண்மையாகிவிட்டது, நீங்கள் ஒரு தீர்க்கதரிசி, இன்று வருவதை அன்றே கூறிவிட்டீர்கள்......

**வ. உ. சி:** கிடக்கிருர்கள் அக்கொலை பாதகர்கள்! நன்றி கெட்ட ஜன்மங்கள்! உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசி வந்த உலுத்தர்கள். அடிகளே அவர்கள் தொலையட்டும்! தங்கள் உடலில் உள்ள இந்த வடுக்கள்......எப்படி வந்தன இவை......கூறுங்கள்......தயவு செய்து கூறுங்கள்......

**காந்தியார்:** கோட்சே என்ருரு மராத்திய வேதியன். பிராம்மண குலத்திலே பிறந்தவன் இச்செயல் புரிந்தான்......அவன்.. ...

**வ. உ. சி:** ஆ! சண்டாளன்! தூர்த்தன்! பேயன்! பழிகாரன்! இந்திய மண்ணுக்கே என்றென்றும் தீராத பழியைக் கொண்டு வந்து சேர்த்த கொலைகாரன் மாபாவி!

**காந்தியார்:** சிதம்பரம், அவனைக் குறை கூற வேண்டாம். அவன் வெறும் அம்பு! எய்தவன் இருக்க அம்பை நொந்து என்ன பலன்? என்னைக் கொன்றவன் கோட்சே. ஆனல் கொலை முயற்சியின் அடிப்படை—கோட்சேத்தனத்தின் தோற்றுவாய் அவனல்ல. என் பக்தர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோரளவுக்குக் காரணம் இக் கொலைக்கு. எவ்வளவு ஆணவத்துடன் விஷவிதைகளைத் தூவினர்கள் அவர்கள். எவ்வளவு ஆக்ரோஷத்துடன் முஸ்லிம்கள்மீது பழிச் சொல் குண்டுகளை வீசினர்கள் வாளுக்கு வாள் கத்திக்குக் கத்தி என்று படேல்கள்

(2-ம் பக்கம் பார்க்க)

## ஆராய்ந்துபார் நெஞ்சமே அமைதிதான் சிறப்பா?

# செந்தமிழை வெறுக்கும் விக்னேஸ்வரர்!

விக்னேஸ்வரர்! ஆம், அவர்தான்! யானை முகமும் நீண்ட துதிக்கையும் பெருத்த தொந்தியும் சிறிய கண்களும் உடைந்த தந்தங்களும் படைத்த அந்த வடிவழகர்தான்! தீராத வினையையும் தீர்த்துவைக்கும் ஈராறு கையனின் அருமை அண்ணனார்தான்! திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் மூத்த திருமகனார்தான். பர்வதவர்த்தனி எனும் காரணப் பெயர் படைத்த உமாதேவியாரின் செல்லப் பிள்ளைதான்! குடுகுடு பெருச்சாளி மீதேறி 'கொழுக்கட்டை'யைத் தேடிய வண்ணம் ஆண்டாண்டுதோறும் "விநாயக சதுர்த்தி" யன்று நம் வீட்டுக்கெல்லாம் 'நல்வரவு' புரிகிறாரே அந்த விக்னேஸ்வரரைத்தான் குறிப்பிடுகிறோம், **அவர் செந்தமிழை வெறுக்கிறார்!**

இதென்னப்பா வேடிக்கை, விக்னேஸ்வரராவது தமிழை வெறுப்பதாவது, யார் இட்டுக் கட்டிய கதை இது, எம்மிடம் கூறி ஏய்க்கப் பார்க்கிறாய் என்று முணுமுணுக்காதீர்கள் அன்பர்களே, நாம் கூறுவது வேடிக்கை அல்ல, புனைந்துரையுமல்ல, நம்முடைய சொந்தச் சரக்கல்ல, கட்டிவிட்ட 'கயிறு'மல்ல, உண்மை! முழு உண்மை! **விநாயகதேவர் செந்தமிழை வெறுக்கத்தான் செய்கிறார்!**

நில்லப்பா நில்லு! அதிகம் பேசாதே! விக்னேஸ்வரர், **பிள்ளையார்** என்ற தூய தமிழ்ப் பெயரும் படைத்தவராயிற்றே, செந்தமிழில் பற்றுடைய சிந்தைக்கினிய தேவராயிற்றே, "**பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் நாலும் கலந்துனக்கு நான் தருவேன், கோலஞ்செய் துங்கக் கரிமுகத்துத் தூமணியே, நீ எனக்கு சங்கத் தமிழ் மூன்றும் தா**" என்று பாட்டு கூட உண்டே, பாலையும் தேனையும் பாகையும் பருப்பையும் பெற்றுக்கொண்டு, அவற்றிற்கு ஈடாக சங்கத் தமிழ் மூன்றையும் தரவல்லவர் அவர் என்று புலவர்கள் பாடியுள்ளனரே, இத்தகையவரையா நீர் செந்தமிழை வெறுப்பவர் என்று கூசாது கூறினீர், ஆகுமா இந்தப் போக்கு, அடுக்குமா இவ்வண்ணம் அடாத செயல் புரிதல் என்று நீங்கள் கேட்கலாம்.

ஆமாம் தோழர்களே நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான்! கணபதியாருக்குத் 'தமிழ்' மீது காதல் உண்டென்று கவிதைகள் பற்பல தமிழிலே இருப்பதும் எமக்குத் தெரியாததல்ல! என்றாலும் சொல்கிறோம், **வேழமுகத்து விநாயகருக்கு செந்தமிழ் மீது வெறுப்புத்தான்!**

விக்னேஸ்வரருக்கு தமிழ்மீது காதல் உண்டென்று கவிதை பல உண்டென்றும் கூறுகிறாய், அதே சமயத்தில் அவருக்குச் செந்தமிழ் மீது வெறுப்பென்றும் கூறுகிறாய் எமக்குப் புரியவில்லையே இந்தப் புதிர், சற்றே நீ விளக்கு என்று நீங்கள் கேட்கலாம். கேட்பது நியாயமுங்கூட!

விக்னேஸ்வரர் ஒரு விசித்திரமான பிறவி! அவர் வாழ்க்கையிலே இத்தகைய புதிர்கள் ஏராளம்!

விக்னேஸ்வரர் எப்படிப் பிறந்தார்—அதுவே ஒரு புதிர்! அழுக் குருண்டைக் கதை ஒன்று, கண்ணாடியில் தோன்றிய ஓங்கார உருவத்தை 'வா'வென்று சிவபெருமான் அழைத்ததும் அது விநாயகராக உரு மாறி ஓடி வந்தது என்பது மற்றோர் கதை, சிவபெருமான்—பார்வதி தேவியார் இருவரும் யானை வடிவம் கொண்டு இன்பம் துய்த்தனர்—அப்போது பிறந்தவர் விநாயகர் என்பது இன்னொரு கதை, இதுபோன்ற கதைகள் இன்னும் பல உண்டு, இவற்றிலே எது உண்மை, யாருக்குத் தெரியும், அது ஒரு புதிர்!

பிறப்பு கிடக்கட்டும் அவருக்குத் திருமணம் ஆயிற்று இல்லையா, அவருக்கு வாழ்க்கைத் துணைவி யார் உண்டா இல்லையா இதுவும் ஒரு புதிர்! பல குளத்தங்கரைகளிலே பிள்ளையார் எதையோ தேடிப் பார்த்து ஏக்கத்துடன் நிற்கும் பாவனையில் இருக்கக் கண்டிருக்கிறோம், இது என்ன என்று கேட்டபோது, பலர் கூறி இருக்கின்றனர், பிள்ளையார் தன் தாயைப் போல குற்றமற்ற பெண் ஒருத்தி தனக்கு மனைவியாக வாய்க்கவேண்டும் என்றெண்ணி அத்தகைய பெண்ணைத் தேடிக்கொண்டிருக்கிறார், இன்னும் கிடைக்கவில்லை, ஆகவே அவர் இன்றளவும் தன் பெண்ணைத் தேடிக்கொண்டிருக்கிறார், அதுதான் இது என்று கூறக் கேட்டிருக்கிறோம். ஆனால் அதே சமயம் வேறு சில கோயில்களில், பிள்ளையார், தன் இருபுறமும் இரு மனைவியரை அமரவைத்து அணைத்து நிற்கும் காட்சியையும் கண்டிருக்கிறோம், அங்கவை சங்கவை என்பன அந்த மனைவியர்தம் பெயர்கள் என்பதையும் அறிந்திருக்கிறோம், இந்த இரு பிள்ளையார்களிலே எது உண்மைப் பிள்ளையார், எது 'இமிடேஷன்', அது நமக்குத் தெரியாது, அதுவும் ஒரு புதிர்!

யானைக்குத் துதிக்கை இருக்கிறது, காரணம் அதற்கு வேறு கை இல்லை, துதிக்கையே கையாக இருக்கிறது, துதிக்கையின் துணைகொண்டுதான் அது மரங்களை முறித்துத் தள்ளி தழைகளை வாய்க்குள் நுழைக்கிறது, சரக்குகளை இடம் விட்டு இடம் தூக்கிச் செல்லவும் துதிக்கைதான் பயன்படுகிறது, ஆனால் விநாயகருக்குத்தான் இருகைகள் இருக்கின்றனவே, சில விநாயகர்களுக்கு நான்கு கைகள்கூட இருக்கின்றனவே, அவருக்கு ஏன் துதிக்கை? இது மற்றொரு புதிர்!

---

**அண்டை விட்டைப்பறிக்கும் சண்டைதான் சிறப்பா?**

Best copy available.

பம்பாய் பூனா பகுதிகளிலே 'கணபதி விழா' மிகச் சிறப்பாக நடப்பது வழக்கம். அங்கெல்லாம் ஒரு வகை பிள்ளையார் உண்டு, பூட்ஸ் அணிந்த கால், தொப்பி போட்ட தலை, 'கோட்' அணிந்த உடல், துதிக்கை அற்ற உருவம் இத்தியாதி சிறப்புகளுடன்—மாடர்ன் பிள்ளையார்! அந்த விநாயகர் எப்படி புது உருவம் பெற்றார், மாறிப் பிறந்தாரா, புது ஜன்மம் எடுத்தாரா, காலத்துக்கேற்ற கோலம் போட்டாலன்றி வாழ்க்கையை நடத்துவது கஷ்டம் என்ற முடிவுக்கு வந்து விட்டாரா நாம் அறியோம் பராபரமே!

அந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்த விதம்—என்ன—அதைச் சொல்லு, சொல்லு அண்ணே என்று, முன்பு, ஏதோ ஒரு தமிழ்ப் படத்தில் ஒரு பாட்டு இருந்தது, அந்தப் பாட்டிலேயும் கருத்து இருக்கிறது, உண்மையாகவே நமக்கும் தெரியவில்லை தொந்தி பெருத்தவிதம்! விநாயக சதுர்த்தி தோறும் கொழுக்கட்டை உண்டு உண்டு அவர் தொந்திபெருத்த தென்றால், நாமும் தானே ஆண்டாண்டுதோறும் உண்கிறோம் நம் தொந்தி பெருக்கவில்லையே, ஏன்?—இது மற்றுமோர் புதிர்போலும்!

பிள்ளையாரின் வாழ்க்கையும் பிறப்பு வளர்ப்பும் புதிர் மயமாயிருக்கின்றன என்பது மட்டுமல்ல பிள்ளையாரே ஒரு புதிர்தான்! தொல்காப்பியத்திலே 'பிள்ளையார்' கிடையாது, சங்க இலக்கியங்களிலே பிள்ளையார்கிடையாது, சிலப்பதிகாரத்திலே பிள்ளையார் கிடையாது, திருவாசகத்திலே கூட அவர் கிடையாது, ஆனால் பிற்காலத்தில் எப்படியோ அவர் தமிழ் நாட்டுக்குள் நுழைந்திருக்கிறார்! எப்படி நுழைந்தார், யார் அவருக்கு 'பாஸ் போர்ட்' கொடுத்தது, எவர் அவருக்கு வரவேற்புத் தாள் வாசித்துக் கொடுத்தனர், யார் அறிவார் இதை, இதுவும் ஒரு புதிர்!

விநாயகரைச் சூழ்ந்துள்ள இந்தப் புதிர்களிலே ஒன்றுதான் அவர் செந்தமிழை வெறுப்பவர் என்பதும்!

**சுதந்த்ரா**—ஒரு ஆரிய ஏடு! ஆங்கிலத்தில் நடத்தப்படுவது! அதிலே ஒரு "**விக்னேஸ்வரர்**" இருக்கிறார், அவர்தான் செந்தமிழை வெறுக்கிறார், பாலும் தெளி தேனும் பாகும் பருப்பும் நாலும் கலந்தளித்தால் சங்கத் தமிழ் மூன்றும் தரும் துங்கக் கரிமுகத்துத் தூமணி வேறு; செந்தமிழை வெறுக்கும் இவர் வேறு, இருவரும் ஒருவர்தானா, நமக்குத் தெரியாது இந்த ஐயவினாவுக்கு விடை இறுக்க, ஆனால் ஒன்று தெரியும் நமக்கு, **சுதந்த்ரா** ஏட்டிலே இருக்கும் விக்கினேஸ்வரர் செந்தமிழை எட்டிஎன வெறுக்கிறார், அவர் எழுதுவதோ ஆங்கிலத்தில்! அவர் எழுதுகிற அந்தக் கட்டுரையின் தலைப்பென்ன தெரியுமோ, ".சாட்டோ வோசி"! ஏதோ ஒரு லத்தீன் வாசகம்! அவருக்கு லத்தீன் மொழிகூடத் தெரியும்போல் இருக்கிறது! தற்கால விக்னேஸ்வரர் தொப்பியும் பூட்சும் அணிகிறபோது அவருக்கு லத்தீனும் ஆங்கிலமும் தெரிவதுதானா ஒரு வியப்பு!

இன்னொரு வேடிக்கை தெரியுமோ, சாதாரணமாக விக்னேஸ்வரருக்கு நாறுகுடலை மாம்பழமும், வரிசை வரிசையாக கொழுக்கட்டையும், கூடை கூடையாக நாவல்பழமும், பத்துப் பத்தாக விளாம்பழமும் சுண்டலும் பருப்பும் தேனும் பாலும்தான் 'பிரியம்' என்று சொல்லுவார்கள், ஆனால் ஆரிய ஏட்டிலேயே தான் வசிக்கும் வீட்டை அமைத்துக் கொண்டுள்ள இந்த விக்னேஸ்வரருக்குப் பிரியமானது அவையெல்லாம் அல்லவராம், வெறும் **மிளகுதண்ணீர்** தானும்! அவர் சிறு குழந்தையாய் இருந்தபோது வெறும் ரசம் தான் வேண்டும் என்று பிடிவாதம் செய்வாராம்! அவருடைய தாயார் சோறும் ரசமும் கலந்து உண்ணு என்று வற்புறுத்துவார்களாம், இவருக்கோ ஒரே ஒரு சோற்றுப் பருக்கை இருந்தால்கூட 'ரசம்' உள்ளே செல்லாதாம்! சோறே கலவாத தூய தனி ரசத்தைத்தான் அவர் குடிப்பாராம், அது சுவையற்றது என்றாலும்கூட! இப்போது பெரியவராய்விட்டபிறகு அந்தக் குழந்தைப் புத்தி போய்விட்டதாம், சோறும் ரசமும் கலந்து சாப்பிடுகிறாராம்!

ரசம் சத்தற்றதாம், உடலுக்கு உறுதி தருவது அல்லவாம், உணவுப்பொருள் வல்லுநர்கள், அது உடலுக்குத் தேவையற்றது என்று கூறுகிறார்களாம், என்றாலும்கூட குழந்தையாயிருந்தபோது இவர் வெறும் ரசமே வேண்டும் என்று கூறிவந்தாராம்.

இவர் வெறும் ரசமாவது குடிக்கட்டும், சோறு கலந்த ரசமாவது அருந்தட்டும், நமக்கென்ன அது பற்றி, ஆனால் அவருடைய அந்தக் குழந்தைப்புத்தியை ஒரு உவமானமாக்கி தமிழைக் கிண்டல் செய்கிறாரே **இந்த ஆங்கில விக்னேஸ்வரர்** அதை எண்ணும்போது தான் நமக்கு அடக்கமுடியாத சிரிப்பு வருகிறது!

வடசொல் கலவாத தனித்தமிழ் வேண்டும் என்று நாம் கூறுகிறோம் அல்லவா, இது, சோறு கலவாத 'ரசம்' வேண்டும் என்று கூறுவதுபோன்ற குழந்தைப் புத்தியாம்! கூறுகிறார் ஆரிய ஏட்டிடம் தஞ்சம் புகுந்த இந்த ஆங்கில விக்னேஸ்வரர்! யாருக்குத்தான் சிரிப்பு வராமலிருக்கும் இந்த மேதாவித்தனமான வாசகத்தைக் கேட்டு!

சோறு கலவாத இரசம் பயனற்றது, தேவையற்றது, உடலுக்கு உறுதி பயக்காதது, உண்பொருள் கலைஞர்களால் வெறுக்கப்படுவதுஎன்றெல்லாம் கூறிவிட்டு, வட சொல் கலவாத தமிழ் சோறு கலவாத இரசம்தான் என்று கூறுவதன்மூலம் தமிழ் தனித்திருந்தால் அது தேவையற்றது, பயனற்றது, உடலுக்கு (நாட்டுக்கு) உறுதி பயக்காதது என்று நிலைநாட்ட நினைக்கிறார் இந்த பிரகஸ்பதி விநாயகர்! எவ்வளவு மட்டரகமான புத்தி படைத்தவராய் இருக்கிறார் இந்த ஆங்கில விநாயகர்!

ஆனால் ஒன்று! இந்த நவீன விக்னேஸ்வரர் கூறுவதிலும் கொஞ்சம் உண்மை இருக்கத்தான் செய்கிறது! தமிழ் (ரசம்) சாறு போன்றதுதான் ஆனால் இவர் குறிப்பிடுகிறாரே அந்தச் சாறு அல்ல நாம் குறிப்பிடுவது, பழச்சாறு! பழச்சாறு போன்றது தமிழ்!

**காணுமானிடரைக் கனம் செயல் முறையா?**



உண்ண உண்ணத் தெவிட்டாதது இச் சாறு, பருகப் பருக உடலுக்கு உறுதி கூட்டுவது, இனிமை செறிந்தது, இன்பம் நிறைந்தது, வடசொல் சோற்றினை இந்தப் பழச் சாற்றுடன் கலப்பது தேவையற்றது, வீண் வேலை, சில சமயம் விபரீதமான விளைவுகளைத் தருவதுங்கூட! ஏன் கற்கண்டு போன்ற கனிச் சாற்றினில் வடசொல் சோற்றினைத் தூவவேண்டும், அது சோறுபோல் வெள்ளையாக இருக்கிறதே தவிர பல சமயம் வெறும் கல் துண்டுகளாகவும் இருக்கிறது, ஏன் அதனை நம் தமிழில் நுழைக்கவேண்டும், பிறகு அவதிப்படவேண்டும், வெறும சாற்றினையே பருகுவோமே என்றுதான் நாம் கூறுகிறோம். தவரு இது?

தமிழ் மொழியில் வந்து கலந்து விட்ட ஒவ்வொரு சொல்லையும் எடுத்து எறிந்து விடுவது எப்போதேனும் ஒரு காலத்தில் முடியக் கூடியதாய் இருக்கலாம், ஆனால் இன்றுவரை மருந்துக்குக்கூட அத்தகைய தனித் தமிழ் 'மாதிரி'யை நாம் கண்டதில்லை என்று கூறிவிட்டு, இதுவரை நடந்திருப்பதெல்லாம் என்ன? 'ஆரியப்' பெயர்களை தூய தமிழாக மொழி பெயர்த்து எழுதி, அதன் பக்கத்தில் அடைப்புக் குறிகளுக்குள் ஆரியப் பெயர்களை எழுதி வருவதுதானே தவிர வேறில்லை—இதுதானப்பா இந்த தனித் தமிழ் பேசும் சூனா மானாக்களின் மகத்தான சாதனை என்று நையாண்டி செய்கிறார் இந்த ஆங்கில விக்னேஸ்வரர்.

அவர் நையாண்டி செய்ததுதான் மிச்சம். உண்மை நிலைமையோ அந்த நையாண்டிக்கு முற்றிலும் மாறாக இருக்கிறது. நாளுக்கு நாள் தனித் தமிழ் இயக்கம் உரம் பெற்று வளாந்துவருகிறது—எதிர்பாராத வேகத்திலும் அளவிலும் அதன் ஆற்றல் பெருகி வருகிறது. அதிலும் குறிப்பாக பத்தாண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டம் தனித் தமிழ் இயக்கத்தின் உயிர்ப்பாற்றலை ஆயிரம் ஆயிரம் மடங்காகப் பெருக்கிவிட்டது. ஒரு இருபதாண்டுகளுக்கு முன்பு தமிழ் எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் எவ்வளவுக் கெவ்வளவு வடசொல்லை அதிகமாகக் கையாள்கின்றனரோ அவ்வளவுக் கவ்வளவு பெருமை என்றெண்ணிவந்தனர். ஆனால் இன்றோ அந்தச் சூழ்நிலை அடியோடு மாறிவிட்டது. வேண்டுமென்றே வட சொற்களைத் தேடிப் பிடித்து தமிழில் நுழைத்துவரும் கி. வா. ஜகந்ாதன் போன்ற ஒரு சில ஆரிய எழுத்தாளர்களைத் தவிர—அது அவர்களுடைய பிறவிக் குணம்—மற்ற எல்லா எழுத்தாளர்களும் வர வர தூய இனிய வடசொல் கலவாத தனித் தமிழையே கையாளத் தொடங்கிவிட்டனர். 20 ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்த புத்தகங்கள் அல்லது கிழமைத்தாள் அல்லது நாளிதழ்களையும் இஞ்ஞான்று வெளிவரும் புத்தகங்கள் அல்லது இதழ்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பவர்கள் எவருக்கும் இந்த உண்மை எளிதில் புலப்படும். சிறுகதை பின்னுவோரும் நாவல்கள் தீட்டுவோரும் இசைப்பாட்டு இயற்றுவோரும் நாடகம் அமைப்போரும் கவிதைகள் பொழிவோரும் கட்டுரைகள் வரைவோரும் மேடைப் பேச்சாளரும் இதழாசிரியத் தோழர்களும் எல்லோரும் ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக் கொண்டு தூய தமிழை வளர்க்கும் காலம் இது என்பதை ஆரிய 'சுதந்த்ரா'வில் அடிமைத் தொழில் செய்துவரும் இந்த ஆங்கில 'விக்னேஸ்வரர்' அறியாமல் இருக்கலாம். ஆனால் நாடு அறியும் நாட்டு மக்கள் எல்லோரும் அறிவர். நமக்கு முக்கியம் நாடு தான்—விக்னேஸ்வரர் அல்ல!

என்றாலும் மடமையைத் திருத்தவேண்டியது—மடமை எந்த மூலையிலிருந்து தன் குருட்டு ஒளியை வீசினாலும் அதனைத் திருத்தவேண்டியது நம் கடமை, எனவே கூறுகிறோம், அழுகிய ஆங்கிலத்திலே ஆரிய நஞ்சினைப் பொழியும் "சாட்டோ வோசி" விக்னேஸ்வரரே கேளும், இந்நாள், தூய தமிழ் வேண்டும்—வடசொற் கலப்பு தொலையவேண்டும் என்ற ஆர்வம், உணர்ச்சி, எக்காளம் தமிழர் வாழும் இடமெங்கும் பரவத் தொடங்கிவிட்டது. இன்று தமிழ் மணம் கமழாத இடமில்லை! தமிழ் முழக்கம் தோன்றாத வட்டாரமில்லை! எங்கும் தமிழ் ஆர்வம்! எங்கும் தமிழ் உணர்ச்சி என்பதே இன்றைய நிலைமை. காணக் கண் இருந்தால் இந்த சூழ்நிலை மாற்றத்தைக் காணும்.

செந்தமிழை வெறுக்கும் விக்னேஸ்வரரே, அதோ பாரும், பேச்சுமேடை, அந்தப் பேச்சாளர் என்ன கூறி தன் பேச்சைத் தொடங்குகிறார் பாரும், ஸ்ரீமான்களே ஸ்ரீமாட்டிகளே என்றா—அல்ல! சகோதர சகோதரிகளே என்றா—அல்ல! கனம் அக்கிராசனாதிபதி சமுகத்திற்கு என் சாஷ்டாங்க நமஸ்காரம் என்றா—அல்ல! தலைவர் அவர்களே, தோழர்களே, வணக்கம் என்று தூய தமிழில் தொடங்குகிறார் அவர். 'ஸ்ரீமான்களே ஸ்ரீமாட்டிகளே' மறைந்து இந்த 'அன்புள்ள தோழர்களே' வந்திருக்கிறது. இந்த ஒரே ஒரு மாற்றம் போதும் சூழ்நிலை மாறிவிட்டது—வடசொற் கலப்பை பெருமையாகக் கருதி வந்த காலம் மலையேறி விட்டது—தனித் தமிழ் உணர்ச்சி பிறந்துவிட்டது என்பதை உமக்கு உணர்த்த, உணரும் ஆற்றல் உமக்கு இருந்தால்!

விக்னேஸ்வரரே, இன்னும் கேளும்! '**பிரசங்கம்**' செய்வதில்லை '**உபந்யாசமும்**' புரிவதில்லை தமிழர்கள் இந் நாள்! **சொற்பொழிவு** ஆற்றுகிறார்கள்! '**சம்பாஷணை**' செய்வதில்லை—'**உரையாடல்**' நிகழ்த்துகிறார்கள்! **அக்கிராசனாதிபதியையோ** உப **அக்கிராசனாதிபதி**யையோ தேடுவதில்லை—**தலைவர் துணைத்தலைவர்**, இவர்களைத்தான் தேடுகிறார்கள்! 'பாலசுப்பிரமணிய பக்த ஜன சபைகள் அல்ல இப்போது முளைப்பது, தமிழ் இளைஞர் கழகங்கள்! அவற்றை நடத்துபவர்கள் **நிர்வாகிகள்** அல்ல **அலுவலர்கள்**! அவற்றிற்கு **காரியதரிசிகள்** கிடையாது—**செயலாளர்கள்** தான் உண்டு! **பொக்கிஷதார்கள்** கிடையாது—**பொருளாளர்கள்**தான் உண்டு, காரியக்கமிட்டி இல்லை [காரியம்—வடசொல்! கமிட்டி—ஆங்கிலம். ஆரிய ஆங்கிலக் கூட்டுறவு!] செயற்குழுதான் உண்டு! **சபா மண்டபம்** இல்லை **பட்டி மன்றம்** தான் உண்டு! அந்தக் கழகங்கள் (சபாக்கள் அல்ல) இப்போதெல்லாம் **விக்ஞாபனங்களை அவலம்பனம்** செய்வதில்லை—**அறிக்கைகளை** வெளியிடுகிறார்கள்! ஆமாம்.

**கடவுள் எனும் மயக்கில் கவிழ்வது முறையா?**

Best copy available.

விக்னேஸ்வரரே உம்மைப் போல இல்லை தமிழர்கள் இப்போது—தமிழை விரும்புகிறார்கள், தூய தமிழையே நாடுகிறார்கள், வடசொல்லும் தமிழும் கலந்த மணல் சோற்றை வேம்பென வெறுக்கிறார்கள்!

இப்போதெல்லாம் விகனேஸ்வரரே, தமிழ்நாட்டில் **பிரதம மந்திரி** கிடையாது—**முதல் அமைச்சர்**தான் இருக்கிறார், **அரசாங்கத்தார்** இல்லை—**ஆளவந்தார்கள்**தான் இருக்கின்றனர். முன்னெல்லாம் விக்னேஸ்வரரே, தமிழகத்தில் **விவாஹ சுப முகூர்த்தங்கள்**தானே நடக்கும், இப்போது பாரும் எங்கும் **வாழ்க்கை ஒப்பந்தங்**களும் **திருமணங்**களும் நிகழ்கின்றன. 10 ஆண்டுகளுக்கு முன்பு விவாஹ சுப முகூர்த்தப் பத்திரிகைகளைத்தானே பார்க்க முடியும், இப்போது அப்படியில்லை, **திருமணத் திரு இதழ்கள்**தான் உண்டு. விக்னேஸ்வரரே, இதோ இரண்டு அழைப்பிதழ்கள் இருக்கின்றன, ஒன்று மன்றல் அழைப்புத் தாள்!—இக்காலத்தது, தூய தமிழில் இருப்பது. மற்றொன்று பாணிக்கிரஹணப் பத்திரிகா! பத்தாண்டுகளுக்கு முந்தியது. இரண்டையும் படித்துப் பாரும், பிறகு கூறும், தனித் தமிழ் இயக்கம் வளர்ந்து வருகிறதா அல்லது அது வெறும் காட்டுக் கூச்சல்தானா என்பதை!

**அழைப்பிதழ் 1**

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## பாணிக்ரஹணப் பத்திரிகை

ம-ா-ா-ஸ்ரீ ....................................அவர்களுக்கு

ஸ்ரீமன் நாராயணபதி கிருபையால் நாளது விக்ரம ஷு சித்திரை மீ 14 வ சுக்கிரவாரம் (27-6-40) உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் 9½ மணிக்குமேல் 11 மணிக்குள்ளாக சிம்ஹ லக்கினத்தில்

அடியேனுடைய த்விதீய குமாரத்தி
சௌபாக்கியவதி
**கெஜலக்ஷ்மியை**

மங்களம் ஸ்ரீ கோபால கிருஷ்ண நாயுடுகாருவின்
ஜேஷ்ட மைத்துனன்
**வெங்கடேஸ்வரனுக்கு**

ஸ்ரீ பெருமந்தூர் வெங்கடேசபவனம் என்னும் எனது கிரஹத்தில் கன்னிதானம் செய்து கொடுப்பதாய் பெரியோர்கள் நிச்சயித்து இருப்பதால் தேவரீர்கள் தங்கள் சஹ குடும்ப சமோதராய் இஷ்ட ஜன பந்து மித்ரர்களுடன் ஷை சுப முகூர்த்தத்திற்கு விஜயம் செய்து வதூவரர்களை ஆசீர்வதித்து, தமியேனையும் கௌரவிக்கக் கோருகிறேன்.

தங்கள் விதேயன்,
**க. துரைஸ்வாமி**

**அழைப்பிதழ் 2**

வாழிய செந்தமிழ்!

## திருமணத் திரு இதழ்

அன்புடையீர்,

திருமகள் கொழுநன் திருவருளால் நிகழ் சர்வதாரி ஆவணி 29-ம் நாள் திங்கட்கிழமை வைகல் 8மணிக்கு மேல்

திருப்பத்தூர் கார்வண்ணனார் மகள்
திருவளர் செல்வி
**கண்ணம்மாளை**

எனது மகன் திருவளர் செல்வன்
**மணிவண்ணனுக்கு**

மணம் செய்விக்க ஆன்றோர்கள் உறுதி செய்தபடி மணமகள் இல்லத்தில் நிகழும் திருமன்றல் விழாவிற்குத் தாங்கள் சுற்றமும் நட்பும் சூழப் போந்து மணமக்களை வாழ்த்த வேண்டுகிறேன்.

தங்கள் அன்பன்,
**முருகப்பன்**

தனித்தமிழ் இயக்கம் புசுபுசுத்துப் போய்விடும் என்கிறீரே, விக்னேஸ்வரரே பார்த்தீரா இத் திருமண இதழ்களை! இரண்டையும் மாறி மாறிப் படியும், மீண்டும் மீண்டும் படியும், கருத்தில் தெளிவு பிறக்கும், கபட நினைப்பு உள்ளத்தில் இல்லாமலிருந்தால்!

"ஒருக்கால், இந்த சூனாமானக்கள் கூறுவதுபோல, தமிழிலிருந்து வட சொற்கள் அத்தனையும் ஒழிக்கப்படும் அற்புதம் நடந்துவிட்டால் (அப்படி ஒருபோதும் நடக்காது; நடக்கும் என்று வைத்துக்கொண்டால்) பிறகு எஞ்சி இருப்பது தமிழாக இருக்காது, வேறு ஏதோ ஒரு புது மொழியாக இருக்கும்" என்று கூறுகிறீரே, ஏனய்யா 'சுவதந்த்ரா' ஏட்டு விக்னேஸ்வரரே, ஏன் உம் அறிவு இவ்வளவுக்குத் தாழ்ந்துவிட்டது! தமிழிலிருக்கும் வட சொற்களை எல்லாம் எடுத்துவிட்டால் மிச்சம் இருப்பது தூய தமிழாக இருக்குமே தவிர அது எப்படி ஒரு புது மொழியாகிவிடும்? வேண்டுமானால் இப்போதிருக்கும் மணிப்பிரவாளத் தமிழாக வடமொழி—தமிழ் இரண்டின் கதம்ப மொழியாக அது இருக்காது—அந்த அளவுக்கு மணிப் பிரவாளத் தமிழிலேயே இது நாள்காறும் பழகிவிட்ட நமக்கு அது "புது" மொழியாகத் **தோன்றக் கூடுமே** தவிர உண்மையிலேயே அது எப்படி புது மொழியாகும்?

"சுயமரியாதைத் தங்கசாலையிலிருந்து அச்சடிக்கப்பட்டு வெளிவருகின்ற தூயதமிழ் என்னும் புத்தம் புதிய நாணயம் வெறும் செல்லாக் காசு தவிர வேறில்லை" என்கிறீரே விக்னேஸ்வரரே—விக்னேஸ்

(7-ம் பக்கம் பார்க்க)

Edited, Printed and Published by P. C. Manickavachagam alias Kanchi Manimoliyar at Free Printers 147, Coral Merchant St., Madras. Joint Editor, M. Ilancheliyan B. A. (Hons)

Best copy available.

